Regd. No TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 40 காசு



### அமைதி

அமைதியிலே இரண்டு வகை உண்டு. ஒன்று, விவரம் தெரியாமலிருக்கிற அமைதி. மற்றொன்று எல்லா விவரங்களையும் தெரிந்திருக்கும் அமைதி.

-பேரறிஞர் அண்ணா


# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்


### சனநாயக வாழ்வு

சனநாயக வாழ்வு என்பது பண்பட்ட மக்களிடையே இருக்க வேண்டியதாகும்.

-தந்தை பெரியார்



மலர்: 6 சென்னை 16 - 3 - 82 செவ்வாய் வெளியூர் 17 - 3 - 82 புதன் இதழ்: 146

★ 2100 ஆசிரியர் பதவிகள் ★ பள்ளிக்கட்டிடத்துக்கு ரூ. 10 கோடி

★ 8-வது படித்தவர்கள் படிக்க அஞ்சல் முறை படிப்பு

★ அண்ணா பல்கலை கழகத்தில் புதிய ஆராய்ச்சி நிலையம்

## இளஞ் சிறார்களுக்கு கல்வி புகட்ட

# மகத்தான திட்டம்



கலவரத்தையொட்டி காயமடைந்தோரை நாகர்கோவில் மருத்துவமனையில் முதல்வர் புரட்சித்தலைவர் சந்தித்து ஆறுதல் கூறினார்.

## கல்வித்துறை முன்னேற்றத்துக்கு கழக அரசின் சீரிய நடவடிக்கை



**சென்னை, மார்ச் 16- கல்வித்துறையில் மறுமலர்ச்சி ஏற்படுத்தும் வகையில் பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ள கழக அரசு; இளஞ்சிறார்களுக்கு கல்வி புகட்ட மகத்தானதொரு திட்டத்தைத் தீட்டியிருக்கிறது.**

தமிழ்நாட்டில் கல்வி வளர்ச்சி பற்றிய கொள்கைக் குறிப்பை இன்று சட்டசபையில் அமைச்சர் அரங்கநாயகம் தாக்கல் செய்தார்.

அந்தக் குறிப்பில் அமைச்சர் அரங்கநாயகம் கூறியிருப்பதாவது:—

கல்விக்காக 1982-83ம் ஆண்டில் ரூ. 318 கோடி அரசுசெலவிடஇருக்கிறது. இதில் ஆதிதிராவிடர், பின்தங்கிய வகுப்பினர் ஆகியோருக்காக செலவிடப்படுவது சேரவில்லை.

82-83ம் ஆண்டில் 1000 இடைநிலை ஆசிரியர் பதவிகள், 150 உடற்பயிற்சி ஆசிரியர்பதவிகள் (நடுநிலை— உயர்நிலைப் பள்ளிகளுக்காக) 500 தமிழாசிரியர் பதவிகள், உயர்நிலைப் பள்ளிகளுக்கு 50 தலைமை ஆசிரியர் பதவிகள்,

உயர்நிலைப் பள்ளிகளுக்கு 300 பி. எட். தர ஆசிரியர் பதவிகள் ஆகியவை ஏற்படுத்த வேண்டும்.

நடு நிலைப் பள்ளிகளில் உள்ள பகுதிநேர கைத்தொழில் ஆசிரியர் பதவி 100 முழுநேரப் பதவிகளாக உயர்த்தப்படும்.

### இளஞ்சிறார் கல்விக்கு திட்டம்

தமிழக அரசு முதன் முறையாக இந்த ஆண்டில் இளஞ்சிறார்கள் கல்விக்கென பெரியஅளவிலான ஒரு திட்டத்தினை தொடங்க இருக்கிறது.

இளஞ்சிறார் களுக்கு பள்ளி செல்லும் மனப்போக்கைப் புகட்டுவதன் மூலம் தொடக்கக் கல்வி வளர உதவும்.

மேலும் இது பள்ளி செல்லும் வயதுள்ள சிறுமியர் தம் தம்பி, தங்கையரைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பிலிருந்து விடுபட்டு அச்சிறுமியர் பள்ளி செல்வதற்கு உறுதுணை புரியும்.

### பிரதமரின் 20 அம்ச திட்டம்

பிரதமரின் புதிய 20 அம்சத்திட்டத்திலும் சிறுமியரிடையே தொடக்கக் கல்வியை மேலும் பரப்புவதற்கு குறிப்பான முக்கியத்துவம் தரப்பட்டுள்ளது.

1982—83ல் தொடங்க இருக்கும் இத்திட்டத்தின் முதல் கட்டமாக தமிழகத்தில் உள்ள 4,433 குழந்தைகள் நல மையங்கள் (பாலவாடிகள்) ஒவ்வொன்றிலும் ஒரு நர்சரி பிரிவு ஏற்படுத்தப்படும்.

இத் திட்டத்திற்காக இந்த ஆண்டு ரூ. ஒரு கோடி ஒதுக்கபபட்டுள்ளது.

தொடக்கப் பள்ளிக் கட்டிடங்களுக்கு இந்த ஆண்டு ரூ. 10 கோடிஅளவில் நிதி ஒதுக்கப்பட்டுள்ளது.

இந்த ஆண்டில் 25 உயர் நிலைப்பள்ளிகளில் ஆய்வுக்கூடங்கள் அமைக்கப்படும்.

30 தொடக்கப்பள்ளிகளுக்கு தொலைக்காட்டிப் பெட்டிகள் வழங்கப்படும்.

ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினர் மாணவர் சிறப்புப்பயிற்சித் திட்டம் இந்த ஆண்டு மேலும் 300 மேல்நிலைப்பள்ளிகளில் மேல்நிலை வகுப்புகளுக்கு விஸ்தரிக்கப்படும்.

இளநிலை ஆசிரியர்கள் இடைநிலை தகுதி பெற வகைசெய்யும் பொருட்டு 5 மாத அஞ்சல் வழி மற்றும் நேரடித் தொடர்பு பயிற்சி நடத்தப்படுகிறது.

இந்த வகையில் பயன் பெறும் ஆசிரியர்கள் எண்ணிக்கை இந்தஆண்டு 5 ஆயிரத்தில் இருந்து10 ஆயிரமாக உயர்த்தப்படும்.

வேலை செய்து வருபவர்கள், இல்லத்தரசிகள் போன்றவர்கள் 8—ம் வகுப்பு தேறியவர்கள் அஞ்சல் முறைப் பள்ளி மூலம் உயர்நிலைப்பள்ளி படிப்பை தொடர ஒரு திட்டம் உருவாக்கபட்டுள்ளது.

தமிழ்ப் பயிற்றுமொழியை ஊக்குவிக்கும் வகையில் பட்ட வகுப்பு மாணவர்கட்கு ரூ. 180 உதவிப்பணம் தரப்படுகிறது.

இத் திட்டத்திற்காக இந்த ஆண்டு ரூ. 35 லட்சம் ஒதுக்கப்படுகிறது.

அண்ணா பல்கலைக் கழகம் ''தொலைவிலுணரும் ஆராய்ச்சி நிலையம் ஒன்றை அமைக்க அரசு ஏற்பளித்துள்ளது.

பூமியில் உள்ள பல வகையான கனிமம போன்ற மூலப் பொருட்களைஆய்வு செய்து கண்டறிந்து கணக்கெடுத்து வகைப்படுத்த இந்த ஆராய்ச்சி உதவும்.

தஞ்சையில் அமையும் தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்கு தஞ்சை மருத்துவக் கல்லூரி அருகில் 1000 ஏக்கர் நிலம் கையகப் படுத்தப்பட்டு வருகிறது.

கட்டிட வேலை இன்னும் சில மாதங்களில் துவங்கும்.

### உலகத் தமிழ் சங்கம்: ரூ. 105 லட்சம் ஒதுக்கீடு

உலகத் தமிழ்ச்சங்கம் மதுரையைத் தலைமையிடமாகக் கொண்டு நிறுவப்படும். இந்தச் சங்கம் நிறுவ இந்த ஆண்டு ரூ. 105 லட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது.

''ஓவியர் உதவிநிதி'' ஒன்றை நிறுவ அரசு ரூ. ஒரு லட்சம் மானியமாக வழங்கியுள்ளது.

வறுமையால் வாடும் கலைஞர்கள் ஏறத்தாழ 1000 பேர் மாதம் ரூ. 150 பெற்று வருகின்றனர்.

இதற்காக இந்த ஆண்டு ரூ. 24 லட்சம் ஒதுக்கியுள்ளது. இந்த ஆண்டில் மேலும் 200 கலைஞர்கட்கு புதிதாக நிதி உதவி வழங்கப்படும்.

இவ்வாறு அந்தக் குறிப்பில் அமைச்சர் அரங்கநாயகம் கூறியுள்ளார்.

---

அமைச்சர் ஆர். எம். வீ. எச்சரிக்கை

# மக்கள் உருவாக்கிய கோவில்களில் சுரண்டி கொழுக்கும் ஆசாமிகள்

**சென்னை, மார்ச் 16- பொதுமக்கள் சேர்ந்து உருவாக்கிய கோயில்களின் சொத்துக்களை சில தனிப்பட்டவர்கள் அனுபவித்துக்கொண்டிருக்கிறார்கள் என்று சட்டசபையில் அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார்.**

சட்டசபையில் கேள்வி நேரத்தின் போது பதிலளிக்கையில் அமைச்சர் ஆர். எம். வீ. கூறியதாவது:-

அறநிலையத் துறையில் 35 ஆயிரம் கோயில்களைச் சேர்த்திருக்கிறார்கள். அதில் 25 ஆயிரம் கோவில்களுக்கு வருமானமில்லை. அப்படிப்பட்ட ஆலயங்களை பராமரிப்பது சிரமமானது.

### கிராம கோவில்கள்

கிராமங்களில் பொது மக்கள் சேர்ந்து உருவாக்கிய ஆலயங்களின் சொத்துக்களை சிலர் அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள். அப்படிப்பட்ட ஆலயங்களை முன்பு போல பொது மக்கள் — கிராமத்திலுள்ளவர்களேகுழுவாகசேர்ந்து பராமரிக்கமுடியுமாஎன்று பரிசீலிக்கச் சொல்லியிருக்கிறோம்.

80, 90 சத வீதம் பேர் தமிழர்களாக வாழும் நாட்டில் மன்னர்களால் கோயில்களுக்கு நிலங்கள் வழங்கப்பட்டது. அதை அரசாங்கம் பாதுகாத்து வந்தது. மன்னர்கள்இல்லாததால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசுதான் பாதுகாக்க வேண்டியிருக்கிறது.

சிறுபான்மையினருக்காக உள்ள அமைப்புகளோடு இதை ஒப்பிடக்கூடாது. வக்ஃப் வாரியம் இருந்தாலும் அதன்மீது அரசுமேலாதிக்கம்செய்து வருகிறது. அமைச்சர் தான்பார்த்து வருகிறார்.

அங்கும் தவறுகள் நடைபெற்றிருக்கின்றன. சிறிய அளவில் இருப்பதால் அது தெரியவில்லை.

### ஓரிரு மாதத்தில் முடிந்துவிடும்

1976ம் ஆண்டு அறங்காவலர்களை கலைத்துவிட்டு அவர்களுக்கு பதிலாக தக்கார்கள் நியமிக்கப் பட்டார்கள். கடந்த 3 ஆண்டுகளாக அங்கு அறங்காவலர்களை நியமிக்கும் முயற்சி மேற்கொள்ளப் பட்டு இருக்கிறது. இன்னும் ஓரிரு மாதங்களில் பணி முடிவடைந்துவிடும்அறங்காவலர் குழுவுக்கு விண்ணப்பம் வராத இடங்களில் தக்கார்கள் அந்த பகுதியிலுள்ள ஒருவரை அறங்காவலராக நியமிக்கலாம்.

சொத்தில்லாத கோவில்களுக்கு அறங்காவலர்கள் வரமாட்டேன் என்கிறார்கள். அதனால்தான் தக்கார் தானே ஒருவரை நியமிக்கலாம் என்று கூறியிருக்கிறோம்.

கடந்த 2,3 ஆண்டுகளாக அதிகாரிகளே நிர்வாகிகளாக இருந்ததால் அவர்களை யாரும்கேட்க முடியாத சூழ்நிலை.

அறங்காவலர்கள் நியமிக்கப்பட்டு அவர்கள் பொறுப்பை ஏற்கவரும் போது ஒப்படைக்காத நிலை. தேர்ந்தெடுக்கப் பட்டு போனவுடன் அதிகாரிகள் 'உங்களுக்கு பொறுப்பே இல்லே வந்து பார்த்து விட்டு போங்கள்' என்கிறார்கள். அப்படி ஒப்படைக்காத அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுக்கப்படும்.

இவ்வாறு அமைச்சர் ஆர்.எம்.வீ. கூறினார்.

---

கலவரப் பகுதியில் சமாதானப் பணி

### புரட்சி-தலைவருக்கு டாக்டர் சந்தோஷம் பாராட்டு

சென்னை, மார்ச் 16— கன்னியாகுமரி மாவட்டத்தில் அமைதி நிலவிட கிறித்தவ சமுதாய மக்கள் தமிழக அரசுக்கு ஒத்துழைப்புத் தர வேண்டும் என்று தமிழ்நாடு கிறித்தவர்கள் சங்கத்தலைவர் டாக்டர் தர்மராஜ் சந்தோஷம் கேட்டுக்கொண்டுள்ளார்.

தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் குமரி மாவட்டத்தில் சுற்றுப் பயணம் செய்தது வரவேற்கத்தக்கதாகும். இருபெரும் சமுதாய மக்கள் நல்லுறவோடு சுமுகமாக வாழ்வதற்கு அவருடையபயணம் பெரிதும் உதவியாக இருக்கும் என்று அவர் நம்பிக்கை தெரிவித்திருக்கிறார்.

---

# தடையை மீறிய ஆசாமிகள் கைது

சென்னை, மார்ச் 16— சென்னையில் தடை உத்தரவை மீறி ஊர்வலம் போக முயன்றவர்களை போலீசார் கைது செய்தனர். நேப்பியர் பூங்கா அருகே வீரமணி உட்பட 49 பேர் கைது செய்யப்பட்டனர்.





மண்டைக்காடு புதூர் கலவரம் குறித்து அனைத்து மதப் பிரதிநிதிகளிடம் விசாரணை நடத்தி பாதிக்கப்பட்ட பகுதிகளை முதல்வர் புரட்சித்தலைவர் பார்வையிட்டார்.

மாநாடுபோல் நடந்த புதுவை கூட்டம்

# தனித்தன்மையுள்ள ஒரே இயக்கம் கழகம்: ப.உ.ச. எழுச்சி முழக்கம்

**புதுச்சேரி, மார்ச், 16- தனித் தன்மையுள்ள ஒரே இயக்கம் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் தான் என்று, மாநாடு போல் நடந்த புதுவைப் பொதுக் கூட்டத்தில் பொதுச் செயலாளர் ப. உ. ச. கூறினார்.**

புதுவை அண்ணா திடலில் நடைபெற்ற மாபெரும் கழகப் பொதுக் கூட்டத்தில் பொதுச் செயலாளர் ப.உ.ச. கலந்து கொண்டு சிறப்புரை யாற்றினார், கூட்டத்திற்கு மாநில கழகச் செயலாளர் பி.கே லோகநாதன் தலைமை வகித்தார்.

கூட்டத்தில் ப. உ. ச. சுலோசனா சம்பத், பாபு கோவிந்தராசன் எம். எல். ஏ. எ. வ. வேலு, சின்னதுரை, ராதாகிருஷ்ணன், கடலூர் ரகுபதி, இலால். ஜனார்த்தனம், உமாபதி, அமீதுசுல்தான் முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்கள் பழனிநாதன், வேணுகோபால் பொதுக்குழு உறுப்பினர்கள் எம். பி. நந்தன், இராச செல்வம் மணிவண்ணன், வீரப்பன் சுல்தான், தொழிற்சங்கத்தைச் சேர்ந்த சுப்புராயன், வேலவதாசன், வீரப்பன் மற்றும் பலர் பேசினர்.

மாலையில் கழக பாடகர் சீனு—கஸ்தூரி குழுவினரின் இசை நிகழ்ச்சி நடைபெற்றது.

கூட்டத்தில் பொதுச் செயலாளர் ப. உ. ச. பேசுகையில் கூறியதாவது!

புதுவை தோழர்கள் தந்தவரவேற்புசாதாரண சண்முகத்திற்காகஅளிக்கப்பட்டது என்று ஏமாறும் ஏமாளியல்ல நான். அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகத்தின் பொதுச் செயலாளர் என்பதற்காக கொடுக்கப்பட்டதே தவிர சண்முகத்திற்கு அல்ல.

நான் தி.மு.க. வினரை ஏசுவதற்காக இங்கு வரவில்லை. கழகத்திற்கு இழுப்பதற்காக வந்திருக்கிறேன் - விரட்டியடிக்க அல்ல.

இங்கே கழக ஆட்சியை கலைத்த பிறகு திமுகவும் இந்திரா காங்கிரசாரும் சேர்ந்து பொய் பிரச்சாரம்செய்து ஆட்சிக்கு வந்ததை சுலோசனா சம்பத் குறிப்பிட்டார். கோயபல்ஸ் பிரச்சாரத்தின் மூலம் ஆட்சியை பிடித்திருக்கிறார்கள். ஆட்சி நடத்தட்டும் கவலை இல்லை. — ஒழுங்காக ஆட்சி நடத்தட்டும்.

## திசைமாறிய தி. மு. க.

தி.மு.க.வும் இந்திரா காங்கிரசும் சேர்ந்துஇந்த நாட்டை ஆள முடியும். காங்கிரசை சரிக்கட்ட முடியும் என்ற நிலை ஏற்பட்டவுடன் தி.மு.க. தலைமையின் பேச்சும் எழுத்தும் திசைமாறிப் போய் விட்டன. நான் அங்கிருந்து வெளியேறி விட்டேன்.

நான் சுகத்தை அனுபவித்துவிட்டு கஷ்டப்படும் நேரத்தில் வெளியேறி விட்டேன் என்று யாரும் கருத வேண்டாம். இந்திராவுக்கு கறுப்புக்கொடி காட்ட வேண்டாம்என்று சொல்லியும் மீறிகாட்டிய கருணாநிதியுடன் நானும் 48 நாட்கள் சிறையிலிருந்தேன்.

மிசா கொடுமைகள் என்று கருணாநிதி வர்ணிப்பாரே அப்போது அவரது கண்ணீரைத் துடைத்தகை இந்தக்கை. இந்த கை மீது நம்பிக்கை வைக்காமல் வேறு கை மீது நம்பிக்கை வந்திருக்கிறது.

கருணாநிதி வழக்கிலிருந்து தப்பித்து வருவார் என்று நினைத்தேன், வழக்கே நடக்கவில்லை.

சட்டமன்றத்தில் கழக உறுப்பினர் ஒருவர் ''முட்டைக்கு 3 ரூபாய் கேட்டவர்கள் திருச்செந்தூருக்குப் போனதால் அந்த முருகன் ராமாவரம் தோட்டத்திற்கு வந்து விட்டான்'' என்று பேசினார்.

உடனே கருணாநிதி மூட்டைக்கு 3 ரூபாய் கேட்டவர்கள் யார் பக்கம் இருக்கிறார்கள் என்பது தெரியாதா என்று கூறியிருக்கிறார்.

என்னுடைய துரதிருஷ்டம் நான் சட்டசபையில் இல்லை. சர்க்காரியா அறிக்கையில் குற்றம் சாட்டப் பட்டவர்களில் நானும் உண்டு. சர்க்காரியா விசாரித்து எழுதியிருக்கிறார். அதைத்தான் கருணாநிதி மறைமுகமாகச் சொல்லுகிறார் என்று கருதுகிறேன்.

சர்க்காரியா சொன்னதைதி.மு.க. அப்படியே ஏற்றுக் கொள்கிறதா என்று கேட்கிறேன்.

## கருணாநிதி வாங்கிய ரூ. 13½ லட்சம்

''கருணாநிதியும் ப. உ. சண்முகமும் மூட்டைக்கு 3 ரூபாய் சர்க்கரை ஆலை அதிபர்களிடம் கேட்டனர். சர்க்கரை ஆலை அதிபர்கள் பதின்மூன்றரை லட்ச ரூபாயை கருணாநிதியிடம் கொடுத்தனர்'' என்று சர்க்காரியா எழுதி வைத்திருக்கிறார்.

தி. மு. க. குருபீடம் யோசிக்க வேண்டும். தி.மு.க.வின் மடாதிபதியாக இருக்கும் கருணாநிதி எதை வேண்டுமானாலும் பேசிவிடலாம் என்று நினைக்கக் கூடாது.

சுலோசனா சம்பத் பேசும்போது நாட்டில் ராஜாஜி, காந்திஜி, வினோபாபாவேபோன்று யார்யாரோ பாதயாத்திரை போனார்கள். அவர்களுக்கெல்லாம் கொப்பளம் வரவில்லை. இவருக்கு வந்ததே என்றார்.

அவரவர் செய்தது அவரவருக்கு வந்தது. (பலத்த கைதட்டல்)

அது அவர் செய்த பாவம் என்று நான் சொல்லமாட்டேன்.

பத்திரிகைகளைப்பார்த்தேன். ''கருணாநிதி விருதுநகரைத் தாண்டினார், காலில் கொப்பளம் வெடித்துரத்தம்கசிந்தது. புண்ணாகியது. டாக்டர்கள் மருந்து தடவி கட்டுப் போட்டார்கள்'' என்றெல்லாம் வந்தது. ''நடந்து போக முடியாவிட்டாலும் உருண்டாவது போவேன்'' என்று கருணாநிதிகூறியிருந்ததையும் பார்த்தேன்.

கருணாநிதி திருச்செந்தூர் போனவுடன் பத்திரிகை நிருபர்கள் ''எங்கே புண்? எப்படியிருக்கிறது?'' என்று கேட்டிருக்கிறார்கள். ''அது ஆறிவிட்டது'' என்று சொல்லியிருக்கிறார். எப்படிப்பட்ட மண்; கால் வைத்தவுடன் புண் ஆறிவிட்டது!''.

சுப்பிரமணிய பிள்ளை சாகடிக்கப்பட்டிருந்தால் அது கண்டிக்கத் தக்கது.

## கருணாநிதி குடும்பத்தின் ஜாதகங்கள்

கடந்த வாரம் இதே நாளில் இதே நேரத்தில் தூத்துக்குடியில்பேசினேன். அங்கு நகர்மன்ற தலைவராக இருந்தவர் திராவிட இயக்க பாரம்பரியமுள்ள சிவசாமி மேடையில் பேசும்போது சிலவற்றை அவர் சொன்னார்.

சோழவந்தானில் இருக்கும் அவரது மகள் வீட்டிற்குப் போனபோதுமூன்றாவது வீட்டில் இருக்கும் ஒரு நாடி ஜோசியரைப் பார்த்தாராம். அவர் சிவசாமியிடம் முத்து, தமிழ் மாறன், செல்வர், கருணாநிதி என்று சில குறிப்புப் புத்தகங்களை எடுத்துக் கொடுத்து சொல்லியிருக்கிறார். கொடுத்துவிட்டு ''நான் யோசனை சொன்னேன். இழந்தபதவியைப் பெறவேண்டுமானால் ஓரிடத்திலிருந்து இன்னோரிடத்திற்கு 120 மைல் தூரம் பாத யாத்திரை செய்யவேண்டுமென்று'' என சொல்லியிருக்கிறார். சிவசாமி சொன்னதை இங்கே சொல்கிறேன்.

நாஞ்சில் மனோகரன் மதுரையிலிருந்து கருணாநிதியை வழியனுப்பிய போது ''போகும்போது எதிர்க்கட்சித் தலைவர் வரும்போது முதலமைச்சர்'' என்று வாழ்த்தி அனுப்பியிருக்கிறார்.

எல்லாமே நாடி ஜோசியம் என்றால் வாக்குப் பெட்டி வைப்பது ஏன்?

சுப்பிரமணிய பிள்ளை குடும்பத்திற்குகருணாநிதி 50 ஆயிரம் ரூபாய் தந்திருக்கிறார். பாராட்டுகிறேன். இப்போதாவது கொடுக்கிற மனம் வந்திருக்கிறதே! கொடுக்கும் மனம் படைத்த முதல்வர் புரட்சித் தலைவரின் எதிரில் உட்கார்ந்திருப்பதால் அந்த மனம் வந்ததோ என்னவோ.

## சிட்டிபாபு சிந்தனையில் இல்லையா?

அலுத்துப் போகாமல் திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு உழைத்து, 10ஆண்டுகாலம்நாடாளுமன்ற உறுப்பினராகவும் ஓராண்டு சென்னை நகர மேயராகவும் அண்ணாவின் குடும்ப நண்பராகவும் கருணாநிதிக்கு மிகவும் வேண்டியவராகவும் இருந்து சிறையில் செத்த சிட்டிபாபு குடும்பம் நினைவுக்கு வரவில்லையா?

கருணாநிதி சொன்ன தன் பேரில் மு. க. முத்துவை நடிகனாக்க 'நம்பிக்கை நட்சத்திரம்' என்ற படத்தை சிட்டிபாபுஎடுத்தார். ஸ்டாலின் அந்த படத்தில் பங்குதாரர். முதலமைச்சர் மகனைகடன் பத்திரத்தில் கையெழுத்துபோடச் சொல்ல முடியுமா? சிட்டிபாபுவே எல்லா பத்திரத்திலும் கையெழுத்துப் போட்டார்.

ஆட்சி கலைக்கப்பட்டது. சிறைக்குப் போன சிட்டிபாபு செத்து வெளியே வந்தார். படமும் வெளியே வந்தது. மிகப்பெரிய நஷ்டம்! கடைசியில் சிட்டிபாபுவின் வீடு ஏலத்திற்கு வந்தது. அவரது மனைவி தாய் வீட்டிலிருந்து கொண்டு ஆசிரியர் வேலை பார்த்து வருகிறார்.

எங்கோ, எப்படியோ இறந்த சுப்பிரமணிய பிள்ளை குடும்பத்திற்கு பணம் கொடுத்த கருணாநிதி, சிட்டிபாபு குடும்பத்திற்கு ஒருகுடிசைகொடுத்திருக்கக் கூடாதா? அந்த குடும்பம் பிழைக்க வழியில்லையே?

நெடும் பயணத்தின் போது சாத்தூர் மண்ணை மிதித்த கருணாநிதிக்கு மதுரை சிறையிலே செத்த சாத்தூர் பாலகிருஷ்ணனின் குடும்பம் ஏன் நினைவுக்கு வரவில்லை?

மந்திரி பதவிக்காக ப. உ. சண்முகம் பேசுகிறான் என்று கருணாநிதி சொல்லலாம். கருணாநிதியுடன் இருந்து அனுபவித்தது போதும். இப்போது இங்கே தரப்பட்ட வரவேற்பு, மந்திரியாகஇருந்தாலும் இப்படி கிடைக்குமா?

பதவி ஆசை இருக்கக் கூடாதா? கூடாது என்றால் சட்டசபையில் எதிர்க்கட்சித் தலைவர் பதவி ஏன்? பட்டை அணிந்து ருத்திராட்ச மாலையுடன் கோவிலுக்கு

(1-ம் பத்தி பார்க்க)

## புழுதி வாக்கத்தில் கழகக் கொடி ஏற்று விழா

சென்னை புழுதிவாக்கத்தில் இன்று மாலை கழக கொடிஏற்று விழா நடைபெறுகிறது. பி. குணசேகரன் தலைமை வகிப்பார்.

மாரிமுத்து, மூர்த்தி கோபால் ஆகியோர் முன்னிலையில் எம். சாந்தலிங்கம் கொடியேற்றுகிறார். கே.மணி இனிப்பு வழங்குகிறார்.

நாடோடி மன்னன், சொக்கலிங்கம், ராமதாஸ், ஹானிதாஸ், கே. கோபால் பேசுகிறார்கள். நடராஜன் நன்றிகூறுவார்

# தி.மு.க.வினர் திரும்பி பார்க்கட்டும்: பல காட்சிகள் நிழலாடும்

## அமைச்சர் குழந்தைவேலு பதில்

**சென்னை, மார்ச் 15- 'நாடோடிமன்னன்' படக்காட்சி பற்றி தி. மு. க. உறுப்பினர் கூறினார். 'திரும்பிப்பார்' என்றும் ஒரு படம் வந்தது. திரும்பிப்பாருங்கள். பல காட்சிகள் நிழலாடும் என்று அமைச்சர் குழந்தைவேலு கூறினார்.**

மதுரை மாநகராட்சி மின்சார பிரிவுக்கு, உலகத் தமிழ் மாநாட்டையொட்டி தற்காலிமாக நியமிக்கப்பட்ட 176 ஊழியர்கள் பணி நீக்கம் செய்யப்பட்டது பற்றி சட்ட சபையில் ஒத்திவைப்புத் தீர்மானம் கொண்டு வரப்பட்டது.

அதன் மீது பேசிய தி. மு. க. உறுப்பினர் ரகுமான்கான் நாடோடி மன்னன் திரைப்படக் காட்சி பற்றிக் கூறினார்.

அமைச்சர் குழந்தைவேலு பதிலளித்துப் பேசுகையில் கூறியதாவது:

உலகத் தமிழ் மாநாட்டையொட்டி மின்சார வசதி செய்ய தற்காலிகமாக 6 மாதத்துக்காக 268 பதவிகள் உருவாக்கப் பட்டன. அதில் 176 ஊழியர்கள், லைன்மேன்களும்அடங்குவர்.

பணிகள் முடிந்த பின் வேறு பணிக்காக சிறிதுகாலம் அவர்களுக்கு பணி நீடிக்க மாநகராட்சி முடிவு செய்து அரசிடம் அனுமதி வாங்கியது. பணிகள் முடிந்த நிலையில்வேறு பணிகள் இல்லாததால், உலகத்தமிழ் மாநாட்டுக்காக நியமிக்கப்பட்ட ஊழியர்கள் 176 பேர் நீக்கப்பட்டுள்ளனர்.

## அனைவருக்கும் வேலை

தி.மு.க. உறுப்பினர் ரகுமான்கான் நாடோடி மன்னன் படம் பற்றி சொன்னார். அனைவருக்கும் வேலை கொடுக்க வேண்டும் என்பது தான் அரசின் கொள்கை. அதில் மாற்றமில்லை.

ஒவ்வொரு படக்காட்சியையும் சொல்லி, அதை செயல் படுத்தினீர்களா என்று கேட்க முடியாது. ''திரும்பிப்பார்'' என்றும் ஒரு படம் வந்தது. அதிலுள்ள காட்சியை எல்லாம் திரும்பிப் பாருங்கள் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அது யார் யாருக்காக திரும்பிப்பார்க்கச் சொல்லப்பட்டது என்பது தெரியும். அப்படித் திரும்பிப் பார்த்தால் பல காட்சிகள் நிழலாடும்.

6 மாதத் திற்கென்று நியமிக்கப் பட்டவர்கள் மட்டுமே நீக்கப்பட்டுள்ளனர்.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலுகூறினார். அதன்பின் ஒத்திவைப்பு தீர்மானத்திற்கு சபாநாயகர் அனுமதி மறுத்தார்.

## அரசின் சீட்டு கம்பெனி

சென்னை, மார்ச் 16— சென்னையில் 2 இடங்களிலும் மதுரை, கோவை வேலூர், சேலம், திருப்பூர் திருநெல்வேலி, நாகர் கோவில், திருச்சி ஆகிய இடங்களிலும் அரசுசீட்டு கம்பெனி ஏற்படுத்த இருப்பதாக அமைச்சர் கே.ஏ.கே.தெரிவித்தார்.

சட்டசபையில் கேள்வி நேரத்தின்போது அமைச்சர் கே.ஏ.கே. கூறியதாவது:—

அரசு சார்பில் சீட்டுக் கழகம் ஒன்று அமைப்பதற்கு கொள்கையளவில் ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது. இக்கழகத்தை சென்னை கம்பெனி பதிவாளரிடம் பதிவு செய்து கொண்டபின், பங்குதாரர்களிடமிருந்து பெறப்படும் தொகையினைச் சேர்த்து வரக் கூடிய மொத்த தொகையான 10 லட்ச ரூபாயை மூலதனமாகக் கொண்டு இச்சீட்டு கழகத்தின் தலைமை அலுவலகத்தை சென்னையிலும் சீட்டு நடத்தும் தொழில் மிக பிரபலமாக உள்ள வேறு இடங்களிலும் இக்கழகத்தின் கிளைகளை ஏற்படுத்த திட்டமிடப்பட்டுள்ளது.

சென்னையில் இரண்டு இடங்களிலும் வேலூர், கோவை, சேலம், திருப்பூர், நெல்லை, மதுரை. நாகர்கோவில், திருச்சி ஆகிய இடங்களிலும் முதல் கட்டமாக கிளைகள் ஏற்படுத்தப்படும்.

அரசுக்கு ஒவ்வொரு ஆண்டும் இதன் மூலம் கிடைக்கும் கணிசமான லாபத்தை தவிர வேலை வாய்ப்பின்றி இருப்பவர்களுக்கு வேலைவாய்ப்பு அளிப்பதற்கும் இத்திட்டம் உதவும். இதுமட்டுமின்றி சந்தாதாரர்கள் செலுத்தும் தொகை அரசு நடத்தும் சீட்டுக் கழகத்தில் பாதுகாப்பாக இருப்பதுடன் இக்கழகத்தின்மூலமாக கிடைக்கும் பங்கு மூலதனம், கமிஷன் மற்றும் வட்டிப் பணத்தைக் கொண்டு பல முன்னேற்றத் திட்டங்களை வகுக்கவும் அரசிற்கு வாய்ப்பு ஏற்படும்.

இவ்வாறு அமைச்சர் கே.ஏ.கே. கூறினார்.



கேரள அரசியலில் புதியதிருப்பம்;

ஒருவர் எதிரணியில் சேர்ந்தார்:

# இ. காங்கிரஸ் அரசு மெஜாரிட்டி இழந்துவிட்டது

## விரைவில் தேர்தல் வரும்?

**திருவனந்தபுரம், மார்ச் 16- கேரள அரசியலில் புதிய திருப்பம் ஏற்பட்டுள்ளது. இந்திரா காங்கிரஸ் கூட்டணியிலிருந்து ஒரு எம். எல். ஏ. எதிரணி சென்றுவிட்டார். இதனால் மெஜாரிட்டி நிலையை இ. காங்கிரஸ் அரசு இழந்துவிட்டது.**

இந்தத் திருப்பத்தால் கேரளத்தில் விரைவில் தேர்தல் வரும் என்ற நிலை ஏற்பட்டுள்ளது.

கேரளத்தில் கருணாகரன் தலைமையில் கூட்டணி அமைச்சரவை ஏற்பட்டு நேற்றோடு 78 நாட்கள் ஆகின்றன.

ஆளும் தரப்பும், எதிர்த்தரப்பும் எழுபது, எழுபது என்ற சம எண்ணிக்கையில் இருக்கின்றன.

இதனால் ஓட்டெடுப்பின் போதெல்லாம் சபாநாயகரது ஆதரவு ஓட்டால் கருணாகரன் ஆட்சி தப்பி வந்தது.

இப்போது அந்த நிலை மாறிவிட்டது.

கருணாகரன் அமைச்சரவைக்கு ஆதரவு அளித்து வந்த கேரள காங்கிரசின் மணி கோஷ்டியைச் சேர்ந்த லோனப்பன் நம்பாடன் என்ற எம். எல். ஏ. திடீர் என்று தனது ஆதரவை வாபஸ் பெற்று விட்டார்.

ஆளுநர் ஜோதி அம்மாளைச் சந்தித்து அமைச்சரவைக்கு தான்கொடுத்து வந்த ஆதரவை வாபஸ் பெறுவதாக எழுதிக் கொடுத்து விட்டார்.

சபாநாயகருக்கும் இது பற்றி நம்பாடன் எழுதியிருக்கிறார். எதிர்க்கட்சி வரிசையில் தனக்கு இடம் ஒதுக்குமாறு கேட்டுக் கொண்டு இருக்கிறார்.

இந்த சூழ்நிலையால் ஆளும் கூட்டணி மெஜாரிட்டியை இழந்தது. இப்போது சபாநாயகர் உட்பட அதன் பலம் 70 தான்.

ஆனால் எதிர் வரிசை பலம் 71 ஆக ஆகிவிட்டது. இந்த நிலையால் எந்த நேரத்திலும் ஆட்சி கவிழும் நிலை ஏற்பட்டுள்ளது.

இப்படிப்பட்ட திடீர் திருப்பத்தால் மே மாத வாக்கில் தேர்தல் நடைபெறும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

எதிர்க்கட்சித் தலைவர்கள் ஆளுநர் ஜோதி அம்மாளைச் சந்தித்து கருணாகரன் அமைச்சரவையை ராஜினாமா செய்யக் கட்டளையிடுமாறு கோரினார்கள்.

கேரளாவைச் சேர்ந்த எஸ். காங்கிரஸ் எம்.பி.க்கள் 4 பேர்தனி கோஷ்டியாக நாடாளு மன்றத்தில் அமர முடிவு எடுத்துள்ளனர்.

இவர்கள் நால்வரும் ஏ. கே. அந்தோணி கோஷ்டியினர். குன்காம்பு தலைமையில் தனியாக இருப்பார்கள்.

பேச்சாளர் முகவரி

A. P. இராமநாதன்
160. N. M. ரோடு,
ஆவடி, சென்னை-54

எஸ். டி. எஸ்., ஆர். எம். வீ. பங்கேற்பு

# சுற்றுலா, தொழில் பொருட்காட்சி நிறைவு விழா

**சென்னை, மார்ச் 16-கடந்த 65 நாட்களாக சென்னை தீவுத்திடலில் நடைபெற்று வந்த சுற்றுலா மற்றும் தொழில் பொருட்காட்சி நிறைவு விழாவில் அமைச்சர்கள் எஸ். டி எஸ்., ஆர்.எம்.வீ. ஆகியோர் பங்கேற்று பாராட்டினார்கள். சிறப்பான முறையில் அமைக்கப்பட்டிருந்த அரங்குகளுக்கு அமைச்சர் எஸ். டி. எஸ். பரிசுகள் வழங்கினார்.**

சென்னை தீவுத் திடலில் கடந்தஜனவரிமாதம் 9ம் தேதியன்று ஆளுநர் சாதிக் அலி தொடங்கி வைத்த 9-வது அகில இந்திய சுற்றுலா மற்றும் தொழில் பொருட்காட்சி நேற்றுடன் நிறைவு பெற்றது.

பொருட் காட்சியின் நிறைவு விழாவில் வருவாய்த்துறை அமைச்சர் எஸ். டி. எஸ். கலந்து கொண்டுசிறப்பானமுறையில் தங்களது அரங்குகளை நிர்மாணித்துவைத்திருந்த நிறுவனங்களுக்கு பரிசுகளை வழங்கினார். பொருட்காட்சியில் நடைபெற்ற படகுப் போட்டியில் வெற்றி பெற்ற மாணவர்—மாணவிகளுக்கும்அவர் பரிசுகளை வழங்கினார்.

இந்த விழாவுக்கு செய்தி அறநிலையத் துறை அமைச்சர் ஆர். எம். வீ. தலைமை வகித்தார்.

(5-ம் பத்தி தொடர்ச்சி)

போக வேண்டியது தானே?

தனித்தன்மை வாய்ந்த கட்சி அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம் தான். மற்ற கட்சிகள் தான் நம் நிழலில் இருக்க வேண்டும்.

எப்பாடு பட்டாவது அண்ணா தி.மு. கழகம் தனது தனித்தன்மையை நிலைநாட்டியே தீரும்.

தி. மு. க. வில் உள்ளவர்களை கேட்டுக்கொள்கிறேன். இனி அதை நம்பிப் பயனில்லை. அது வளர வழியில்லை. கருணாநிதி தன்னையும் தன்னைச் சுற்றியும் தான் கட்சி வைத்திருக்கிறார். புரட்சித்தலைவர் அண்ணாவைச் சுற்றி வைத்திருக்கிறார். எங்கே இருந்தாலும் நீங்கள் இங்கே வாருங்கள்.

இவ்வாறு பொதுச்செயலாளர் ப. உ. ச. கூறினார்.

# கப்பலேறும் கப்பல் புளுகுகள் !

**அனைத்திந்திய அண்ணா தி.மு. கழக அரசு மீது அவதூறு பொழிபவர்கள் எட்டி மரங்களை விட்டங்களாக்கிடக் கட்டியம் கூறுபவர்கள்,**

அவர்களுடையவாதங்கள்தொட்டால் உதிர்ந்து வீழ்கின்றன. அவர்களுக்குக் கப்பல் கப்பலாகப் பேசுவதிலே ஓர் களிப்பு. ஆனால் அந்தக் களிப்பு பிறக்கும் போதே மரித்துவிடுகின்றது.

அனைத்திந்திய அண்ணா தி.மு. கழக அரசை அசைத்திட அவர்கள் காகிதக் கப்பலேறி வருகிறார்கள்.

பூம்புகார் கப்பல் போக்குவரத்துக் கழகத்திற்குக் கப்பல்கள் வாங்க கழக அரசு முன்னர் முயற்சித்தது.

அதற்காக பல்கேரிய அரசுடன் முறைப்படி தொடர்பு கொண்டது.

அவ்வளவுதான்!

கப்பல் - பேரம் - ஊழல் என்றெல்லாம் எதிர்க்கட்சியினர் காம்போதி பாட ஆரம்பித்தனர்.

பல்கேரியாவிலிருந்து தமிழக அரசு கப்பலே வாங்கவில்லை. அதற்காக எந்தப் பணமும் கொடுக்கப்படவுமில்லை.

**வாங்காத கப்பலில் கொடுக்காத பணத்தில் கோடி கோடி ஊழல் என்று சந்துமுனைச் சிந்துகள் பாடினர்.**

ஜவுளிக்கடை வாயிலில் கண்ணாடிக் கூண்டில் நிற்கும் சிங்காரிப் பொம்மை தினம் ஒரு பட்டுச் சேலை உடுத்துகிறது என்பதற்காக எவனாவது அதனை மணம் முடித்துக்கொள்ள முன்வருவானா?

வழிப்போக்கன் ஏறிட்டுப்பார்த்து விட்டு வழியோடு போவான். எதிர்க்கட்சியினர் கொட்டி முழக்கிய ''பால்டிக்கா பல்கேரியா கப்பல்'' ஜோடிப்புகளையும் ஏதோ மாலை நேரப் பொழுது போக்கு பேச்சுக் கச்சேரி என்றே மக்கள் கருதினர்.

## காகித ஓடம் கரைசேராது

கடந்த சட்டமன்றத் தேர்தல் பிரச்சாரத்திற்கு தி.மு. கழகத்திற்குக் கிடைத்த ஆயுதங்களில் ஒன்று பல்கேரியா கப்பல் பிரச்சினையாகும். திருவிழாவிற்குப் போகிறவர்கள் வர்ணஜால வாண வேடிக்கைகளைப் பார்த்து விட்டு ஆண்டவனைத் தொழுவது போல மக்கள் தி.மு. கழகப் பிரச்சாரங்களை ரசித்து விட்டு அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகத்திற்கும் அதன் அணிக்குமே வாக்களித்தனர். மகத்தான வெற்றி தேடித் தந்தனர்.

எதிர்க்கட்சியினரின் காகித ஓடங்கள் கரை சேரவில்லை.

பல்கேரியா சோஷலிச நாடு.கப்பல் தளங்களை நடத்துவதும் பல்கேரிய அரசு தான். அங்கே எந்த அதிகாரியும் பேரமும் பேச முடியாது. கையூட்டும் பெற முடியாது. அப்படி எவனாவது பேரம் பேசி கையூட்டுப் பெற்றால் அடுத்த நிமிடம் அவன் நிற்கும் இடம் தூக்குமேடை.

அனைத்திந்திய அண்ணா தி.மு. கழக அரசை களங்கப்படுத்துவதாக எண்ணிக் கொண்டு எதிர்க்கட்சியினர் ஒரு சோஷலிச நாட்டையே கொச்சைப் படுத்தினர்.

எதிர்க்கட்சியினரின் அவதூறுகளை மறுத்து டெல்லியிலுள்ள பல்கேரியத் தூதரகமே விளக்க அறிக்கை வெளியிட்டது.

அதன் பின்னரும் டெல்லிக்கு விண்ணப்பம் என்று காவடி எடுத்து சேவடி தொழுதனர்.

மறு பிரசவமும் மகப்பேற்றைத் தரவில்லை.

தற்போது தமிழகசட்டமன்ற பட்ஜெட் கூட்டம் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. இந்த நேரம் பார்த்து எதிர்க்கட்சியினருக்குத் தீனி கொடுப்பது போல் மத்திய கப்பல் அபிவிருத்திக் கழக அதிகாரி டெல்லி நிருபர்களுக்குப் பேட்டி தருகிறார்.

தற்போது தமிழக அரசு மேற்கு ஜெர்மனியிலிருந்து பூம்புகார் கப்பல் போக்குவரத்துக் கழகத்திற்கு கப்பல்கள் வாங்க முயற்சித்தது.

நூறுகோடி ரூபாயில் மேற்குஜெர்மனியிலிருந்து மூன்று கப்பல்கள் வாங்கிட கடந்த டிசம்பர் மாதம் உடன்பாடும் கண்டது.

இதனை மத்திய அரசுக்கு முறைப்படி தெரிவிக்கவும் செய்தது.

மத்திய அரசின் கப்பல் அபிவிருத்திக் கழகம் அந்த உடன்பாட்டைப் பரிசீலித்து மேற்கு ஜெர்மன் கப்பல்கள் அதிக விலையுள்ளது. எனவே வாங்க வேண்டாம் என்று மேலான ஆலோசனையும் வழங்கியது.

மத்திய அரசுக்கும் மாநில அரசுக்கும் நடந்த இந்தக் கடிதப் போக்குவரத்து விபரங்களை என்ன காரணத்தாலோ மத்திய கப்பல் அபிவிருத்திக் கழக அதிகாரி நிருபர்களை அழைத்துத் தெரிவித்திருக்கிறார். அவருக்கு என்ன அவசரமோ? தமிழக சட்டமன்றக் கூட்டம் நடைபெறும் நேரம் பார்த்து வெளியிட்டிருக்கிறார்.

இந்தச் செய்தி எதிர்க்கட்சியினருக்கு எவ்வளவு பெரிய வெல்லக் கட்டி? தமிழக அரசை விமர்சிப்பதே தலையாய பணி எனச் செயல்படும் ஏடுகளுக்கு எவ்வளவு பெரிய தலைப்புச் செய்தி?

மேற்கு ஜெர்மனியிலிருந்து தமிழக அரசு கப்பல் வாங்க முனைந்ததில் ஏதோ பெரிய ஊழல் நடைபெற்றதுபோலவும் அதனைத் தக்க தருணத்தில் மத்திய அரசு தடுத்து நிறுத்தி விட்டது போலவும் ஆங்கில ''முரசொலியான'' இந்தியன் எக்ஸ்பிரஸ் உட்பட எல்லா எதிர்க்கட்சி ஏடுகளும் அமர்க்களமாகச் செய்தி வெளியிட்டன.

## இருண்ட உள்ளங்களின் விகார ஆசைகள்

இப்போது இருண்ட உள்ளங்களின் விகார ஆசைகள் எரிந்து சாம்பலாகிவிட்டன.

பொய்மை எவ்வளவு உயர்ந்த பீடத்திலிருந்து எத்தனை அலங்கரிப்புக்களோடு வந்தாலும் மக்கள் அதனை எளிதாக அடையாளம் கண்டு கொள்வார்கள்.

நடந்ததுதான் என்ன? தமிழகத்திற்கு நிலக்கரி கொண்டுவர கப்பல்கள் தேவை.

ஏற்கனவே இருந்த கப்பல்கள் பயனற்றுப் போயின. என்றாலும் அந்தக் கப்பல்களை சமயநல்லூர் மின்சார நிலையத்தை அன்றைய ஆட்சி விற்பனை செய்தது போல தமிழக அரசு விற்பனை செய்யவில்லை. கல்கத்தாவிலுள்ள மத்திய அரசின் நிறுவனத்திற்கே விற்பனை செய்தது.

அதன் பின்னர் பூம்புகார் கப்பல் நிறுவனத்திற்குக் கப்பல்கள் வாங்க முயன்றது. அப்படிக் கப்பல்கள் வாங்குவதற்கு எந்த இடைத்தரகருக்கும் எந்த அதிகாரமும் கொடுக்கவில்லை.

* உலகம் முழுமையும் 113 கப்பல் கட்டித்தரும் தளங்கள் இருக்கின்றன. அத்தனை தளங்களிலிருந்தும் தமிழக அரசு டெண்டர் கோரியது.

* எந்தெந்த நாடுகளில் கப்பல் கட்டும் தளங்கள் இருக்கின்றனவோ அந்தந்த நாடுகளில் உள்ள இந்தியத் தூதரகங்கள் மூலமாகவும் தமிழக அரசு தகவல் தந்தது.

* லண்டனிலிருந்து கப்பல் வணிகத்திற்கென்றே ''லாயிட்ஸ்'' ''பேர் பிளே'' என்ற ஏடுகள் வெளியாகின்றன. அந்த ஏடுகளிலும் ''கப்பல்கள் தேவை'' என்று தமிழக அரசு விளம்பரம் செய்தது.

அவைகளெல்லாம் இதயத்தைச் சேறாக்கிக் கொண்டிருப்பவர்களுக்குத் தெரிய நியாயம் இல்லை தான்!

உலகம் முழுமையுமுள்ள 113 கப்பல் கட்டும் தளங்களில் நான்கே நான்கு தளங்கள் தாங்கள் கப்பல்கள் கட்டித்தருவதாக தமிழக அரசுக்கு தெரிவித்தன. டெண்டர்கள் அனுப்பின.

அவைகளை தொழில்நுட்ப வல்லுநர்கள் ஆராய்ந்தார்கள். பூம்புகார் கப்பல் போக்குவரத்துக் கழகத்திற்கு மேற்கு ஜெர்மனியிலிருந்து கப்பல்கள் வாங்குவதுதான் லாபகரமானது என்று அவர்கள் கணித்துக் கூறினர்.

அந்த அடிப்படையில் மேற்கு ஜெர்மனியிலிருந்து 3 கப்பல்களை வாங்குவதற்கு தமிழக அரசு உடன்பாடு கண்டது. ஆனால் அந்த உடன்பாட்டை மத்திய கப்பல் அபிவிருத்திக் கழகம் ஏற்கவில்லை.

இந்த விபரங்களை அந்தக்கழகம் அதி அவசரப் பிரச்சினையாகக் கருதி நிருபர்களை அழைத்துத் தெரிவிக்க வேண்டிய நியாயமும் இல்லை.

மேற்கு ஜெர்மனியிலிருந்து கப்பல்கள் வாங்க வேண்டாம் என்று ஆலோசனை கூறியவர்கள் தென் கொரியாவிலிருந்து வாங்கு—ஜப்பானிலிருந்து வாங்கு என்று தமிழக அரசுக்குப் பரிந்துரை செய்தார்கள்.

**தென் கொரியாவோ, ஜப்பானோ கப்பல்கள் கட்டித் தருவதாக தமிழக அரசுக்கு எந்த டெண்டரும் அனுப்பவில்லை.**

டெண்டர் அனுப்பவில்லையென்றாலும் அந்த நாடுகளிலேயே வாங்குங்கள் என்று தமிழக அரசுக்கு ஆலோசனை கூறுகிறார்கள்,

## டெண்டர் அனுப்பாத நாட்டில் கப்பல் வாங்கசொல்லும் விசித்திரம்

டெண்டரே அனுப்பாத ஒரு நாட்டிலிருந்து தமிழக அரசு கப்பல்கள் வாங்க முயன்றிருந்தால் இங்குள்ள எதிர்க்கட்சியினர் என்ன கூப்பாடு போட்டிருப்பார்கள்?

அதனை மத்திய கப்பல் அபிவிருத்திக் கழகம் ஏற்றிருக்குமா?

சட்ட விரோதம் என்று உடன்பாட்டையே தூக்கி எறிந்திருக்கும்.

என்றாலும் டெண்டரே அனுப்பாத நாடுகளில் இருந்து கப்பல்கள் வாங்க அந்தக் கழகம் ஆலோசனை வழங்கியிருக்கிறது. அந்த ஆலோசனைக்கு ஏற்ப தற்போது தமிழக அரசு.கப்பல்கள் வாங்குவதற்கு தென் கொரியாவையும், ஜப்பானையும் அணுகியிருக்கிறது.

இதற்கு மத்தியில் இப்போது இன்னொரு வேடிக்கை நடந்திருக்கிறது. அதனை ராஜ்ய சபையில் நமது கழக உறுப்பினர் ராமகிருஷ்ணன் அம்பலப்படுத்தியிருக்கிறார். காலத்தோடு அவர் செய்த பணி எதிர்க்கட்சியினரை சஞ்சலச் சுனையில் வீழ்த்தியிருக்கும்.

## தமிழக அரசு வாங்கினால் அதிகவிலை மைய அரசு வாங்கினால் மலிவுவிலையா?

''மொகல் லைன்ஸ்'' என்று மத்திய அரசு ஓர் கப்பல் போக்குவரத்துக் கழகம் கண்டிருக்கிறது. அந்தக் கழகம் இப்போது கப்பல்கள் வாங்கப் போகிறது.

தென் கொரியாவிலிருந்தா? அல்ல. ஜப்பானிலிருந்தா? அல்ல.

**தமிழக அரசு எந்த நாட்டிலிருந்து கப்பல்கள் வாங்க ஒப்பந்தம் கண்டதோ அதே மேற்கு ஜெர்மனியிலிருந்து கப்பல்கள் வாங்குகிறது.**

**தமிழக அரசு எந்தக் கப்பல்களை வாங்க முன்வந்ததோ அதே கப்பல்களை வாங்குகிறது.**

**தமிழக அரசு அந்தக் கப்பல்களுக்கு என்ன விலை கொடுக்க முன் வந்ததோ அதே விலைக்கு கப்பல்கள் வாங்குகிறது.**

**தமிழக அரசு வாங்கினால் அதிக விலையாம்; ஆனால் மத்திய அரசு அதே விலைக்கு அதே கப்பல்களை வாங்கினால் கொள்ளை மலிவு விலையாம்.**

## அழுகல் வாதங்களின் மொத்த குத்தகைதாரர்கள்

அழுகல் வாதங்களின் மொத்தக் குத்தகைதாரர்கள் இதற்கு என்ன சொல்கிறார்கள்?

**அவர்கள் வெட்கத்தால் மவுனித்து நிற்கிறார்கள்.**

கழக அரசு மீது இன்னொரு களங்கம் சொல்ல மத்திய கப்பல் அபிவிருத்திக் கழகம் ஓர் கல்கண்டுச் செய்திதந்தது என்று களிப்படைந்த இந்தியன் எக்ஸ்பிரசுகள் என்ன செய்கின்றன.

**அவர்களுடைய சிரிப்பு சிறைப்பட்டு விட்டது.**

**சேவல் கூவித்தான் பொழுது புலரும். ஆனால் ஆந்தைகள் அலறிப்பார்க்கின்றன. அலறட்டுமே!**

**கழக அரசு மீது வீசிட மையிருட்டில் செல்லரித்த ஆயுதங்களைத் தேடுகிறார்கள். தேடட்டுமே.**

எத்தனையோ சோதனைகளை வென்ற அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம் இனி எதிர் கொள்ளும் சோதனைகளையும் வெல்லும்.

**- சோலை**

---



ராதாகிருஷ்ணன் நகரில்

## அமைச்சர் ராகவானந்தம் பேசுகிறார்

சென்னை, மார்ச் 16— ராதாகிருஷ்ணன் நகர் தொகுதி 2-வது வட்டத்தில் நேதாஜிநகர் மெயின் வீதியில் 17-ந் தேதி மாலை 7 மணிக்கு கழகப் பொதுக் கூட்டம் நடைபெறுகிறது.

கூட்டத்திற்கு ஏ. எஸ். எ லியாகத் அலிகான் தலைமை வகிப்பார்.

அமைச்சர் ராகவானந்தம், டி.கே. கபாலி, சமரசம், இ. மதுசூதனன். தரங்கை கண்ணன், மோகனசுந்தரம் பெரம்பூர் சாலமன், ஜி. கே. சாமி. சுப்பராயலு சுந்தரம் மற்றும் பலர் பேசுகிறார்கள்.

## பேச்சாளர் முகவரி

ந சு. மணி
நடுவீரப்பட்டு
சோமங்கலம் போஸ்ட்
குன்றத்தூர் வழி

---

தமிழகத்திற்கு ஒரு நீதி
கர்நாடகத்திற்கு ஒரு நீதியா?

## சிமெண்ட் ஊழலுக்கு விசாரணை கமிஷன்: அர்ஸ் கோரிக்கை

**பெங்களூர், மார்ச் 16- கர்நாடகத்தில் நடந்த சிமெண்ட் ஒதுக்கீடு ஊழல் பற்றி விசாரிக்க விசாரணைக் கமிஷன் அமைக்கவேண்டும் என்று பிரதமர்இந்திராவுக்கு கடிதம் எழுதப் போவதாக தேவராஜ் அர்ஸ் கூறினார்.**

எரிசாராய ஏற்றுமதி சம்பந்தமாகத் தமிழக அரசுக்கும்கேரள இடதுசாரி அரசுக்கும் எதிராக விசாரணைக் கமிஷன் அமைத்த இந்திரா கர்நாடக சிமெண்ட் ஊழலுக்கும் விசாரணைக் கமிஷன் அமைப்பார் என்று எதிர்பார்ப்பதாக அர்ஸ்கூறினார்.

தமிழகத்திற்கு ஒரு நீதி கர்நாடகத்திற்கு ஒரு நீதி என்று இந்திரா செயல்படமாட்டார் என்ற நம்பிக்கை தமக்கு இருப்பதாகவும் அவர் கூறினார்.

### சிறப்பு கோட்டா கறுப்பு கோட்டா ஆனது

கர்நாடகத்தில் நடந்த சிமெண்ட் ஒதுக்கீட்டு ஊழலில் முதல்வர் குண்டுராவ் சம்பந்தப்பட்டிருக்கிறார். சிவில் சப்ளை அமைச்சர் மாணிக்ராவ் பட்டீலும் சம்பந்தப்பட்டிருக்கிறார்.

கருநாடக அரசுக்கு சிறப்புக் கோட்டாவாக ஒதுக்கப்பட்ட 10 ஆயிரம் டன் சிமெண்டில் 4 ஆயிரம் டன் சிமெண்ட் 30 தனியார்களுக்குத் தரப்பட்டிருக்கிறது. இந்த சிமெண்ட் அரசாங்கக் கட்டிடங்கள் கட்டுவதற்கும் இதரப் பொதுப் பணிகளுக்காகவும்ஒதுக்கப்பட்டதாகும். அந்த சிமெண்ட்தான் 30 பெரு முதலாளிகளுக்கு ஒதுக்கித் தரப்பட்டிருக்கிறது.

விசாரணைக் கமிஷன் விசாரிக்கத்தகுந்த ஊழல் இந்த ஊழல்தான். எனவே இந்த ஊழலை விசாரிக்க விசாரணைக் கமிஷன் அமைக்க வேண்டும் என்று பிரதமர் இந்திராவுக்குக் கடிதம் எழுதப்போகிறேன்.

### ஊரறிந்த ஊழல்

எரிசாராய ஏற்றுமதி சம்பந்தமாக தமிழக அரசுக்கும் கேரள இடதுசாரிக் கூட்டணி அரசுக்கும் எதிராக விசாரணை கமிஷன் அமைத்த இந்திரா ஊரறிந்த இந்த சிமெண்ட் ஊழலை விசாரிக்க கமிஷன் அமைப்பார் என்று நம்புகிறோம். இவ்வாறு காங்கிரஸ் (எஸ்) கட்சித் தலைவர் தேவராஜ்அர்ஸ் நிருபர்களிடம் கூறினார்.

கர்நாடகத்தில் நடந்த வரலாறு காணாத சிமெண்ட் ஊழலை அம்பலப்படுத்தி நீதி மன்றம் செல்வதுபற்றியும் சிந்தித்துக் கொண்டிருக்கிறோம் என்றும் அர்சு கூறினார்.

---

**கலைக்குழு முகவரி**
கவிஞர்
காஞ்சி அண்ணாதாசன்
(கலைக்குழு)
எண்: 9, சிலேட்டர் புரம்
மயிலை, சென்னை-4

---



ராயபுரத்தில்

## டாக்டர் நாவலர் பேசுகிறார்

சென்னை, மார்ச் 16— சென்னை ராயபுரம் தொகுதி சஞ்சீவிராயன் கோயில் தெருவில் நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் பேசுகிறார்.

17—ம்தேதி புதன் மாலை 7 மணிக்கு நடக்கும் இந்தக் கூட்டத்திற்கு கட்பீஸ் வரதன் தலைமை வகிப்பார்.

நிதியமைச்சர் டாக்டர் நாவலர், இ. மதுசூதனன், டாக்டர் சமரசம், தரங்கை கண்ணன், இரா. சோமசுந்தரம், எம். ஜி. சந்தானம், வி. சந்திரன், பெரம்பூர் சாலமன் மற்றும் பலர் பேசுகிறார்கள்.

---

Published by K.Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road. Madras-600 029.
Editor:
E. PARASURAMAN

---

## மராட்டிய எரிசாராய ஊழல்: விசாரணை நடத்த கோரிக்கை

**பம்பாய், மார்ச் 16- மராட்டிய மாநிலத்திலிருந்து கேரளத்திற்தும் கர்நாடகத்திற்தும் எரிசாராயம் ஏற்றுமதி செய்யப்பட்டதில் பயங்கர ஊழல் நடைபெற்று இருக்கிறது என்று சரத்பவார் குற்றம் சாட்டினார்.**

**இந்த ஊழல் பற்றி விசாரணை நடத்திட பொது விசாரணை நடத்த வேண்டும் என்றும் அவர் கோரினார்.**

கர்நாடகத்திலும் கேரளத்திலும் உள்ள சாராய உற்பத்தியாளர்களுக்கு 6 லட்சம் டன் எரிசாராயம் ஒதுக்கிக் கொடுக்கப்பட்டிருக்கிறது. மராட்டிய மாநிலத்தில் உள்ள சாராய ஆலைகளுக்குக் கொடுக்கப்பட வேண்டிய கோட்டாவை பெருமளவு குறைத்து இப்படி அண்டை மாநிலங்களின் சாராயத் தொழற்சாலைகளுக்கே கொடுக்கப்பட்டிருக்கிறது என்று காங்கிரஸ் (எஸ்) கட்சித் தலைவர் சரத்பவார் சட்டமன்றத்தில் பகிரங்கமாகக் குற்றம் சாட்டினார்.

மராட்டிய மாநில சாராய ஆலைகளுக்கு ஒதுக்கப்பட்ட எரிசாராயம் எவ்வளவு? ஏன் அந்த அளவை திடீரென்று குறைத்தீர்கள்?

கர்நாடக, கேரள மாநில சாராய உற்பத்தியாளர்களுக்கு 6 லட்சம் லிட்டர் எரிசாராயம் ஒதுக்கிக் கொடுத்திருக்கிறீர்கள்.

எந்த அடிப்படையில் இப்படிக் கொடுத்தீர்கள் என்ற விபரங்களையெல்லாம் மன்றத்தில் வெளியிடவேண்டும்.

எரிசாராய ஏற்றுமதியில் பயங்கர ஊழல்கள் நடந்திருக்கின்றன. அந்த ஊழல்களை விசாரிக்க கமிஷன் அமைத்தாக வேண்டும். பொது விசாரணை நடத்தவேண்டும் என்று சரத்பவார் கூறினார்.

## பெரம்பூரில் கழகக் கூட்டம்

சென்னை. மார்ச். 16- சென்னை பெரம்பூர் 28-வது வட்டம் பெரம்பூர் ராகவாச்சாரி தெருவில் இன்று (16-ந் தேதி) மாலை கழகப் பொதுக் கூட்டம் நடைபெறுகிறது.

திருவை அண்ணாமலை, ஜி.விசுவநாதன் எம்.எல் ஏ., கே. அம்சாமுகமது: திண்டுக்கல் சீனிவாசன், தமிழ்மணி, இப்ராகிம், ராஜாராம், நீலகண்டன் மற்றும் பலர்பேசுகிறார்கள்

---

அமைந்தகரை

## டானரி தொழிலாளர் கோரிக்கை

சென்னை, மார்ச் 16— சென்னை அமைந்தகரை நியூஹாரிசன் லெதர் கம்பெனி தொழிலாளர் 70 பேர் கூலி உயர்வு கோரி வருகிறார்கள்.

தினமும் ரூ. 3 என்று கொடுக்கப்படும் கூலியை அதிகப்படுத்த வேண்டும் என்று கோரி வருகின்றனர்.

பேச்சுவார்த்தை மூலம் இந்தப்பிரச்னைக்கு தீர்வு காண வேண்டும் என்று அந்தத் தொழிலாளர்கள் கோரியுள்ளனர்,

108 வது வட்டத்தில்

நாளை மாலை

## ஜேப்பியார் பேசுகிறார்

சென்னை, மார்ச் 16— சென்னை 108 வது வட்டம் காமராஜபுரத்தில் நாளை (17 ந் தேதி) மாலை ஆறுமுகம் தலைமையிலும், செல்வதுரை, ஆர். எம். கிருஷ்ணன் முன்னிலையிலும் கழகப் பொதுக் கூட்டம் நடைபெறுகிறது.

ஜேப்பியார் எம்.எல்.சி. திருவை அண்ணாமலை புலவர் இந்திர குமாரி, பா. அங்கமுத்து கு. க. செல்வம், சைதை தமிழ்ச் செல்வன், ச. கணேசன் ஆகியோரும் மற்றும் பலரும் பேசுகிறார்கள்.

31 வது வட்டத்தில்

## முசிறிப்புத்தன் பேசுகிறார்

சென்னை மார்ச் 16— சென்னை 31 வதுவட்டம் பாலவாயல் சாலையில் நாளைமாலை 8 மணிஅளவில்நடக்கும் கழகக் கூட்டத்தில் அனைத்துலக எம். ஜி. ஆர். மன்றத் தலைவர் முசிறிப்புத்தன் எம்.எல்.ஏ. சிறப்புரை நிகழ்த்துகிறார்.

இ. மதுசூதனன், ஐசரி வேலன், டாக்டர் சமரசம் எம். எல். ஏ., பா. வளர்மதி தரங்கை கண்ணன், வ. நீலகண்டன், எஸ். பக்தவத்சலம், பன்னீர்செல்வம், வேலு பாண்டியன், சி. சுப்பிரமணி, அந்தோணி, கோட்டி பாண்டுரங்கன், நடராசன், குப்பன், பாஷ்யம் பூபதி, தயாளன், வஜ்ஜிர வேலு, ஜீவா மற்றும்பலர் பேசுகிறார்கள்.

ரவிச்சந்திரன் நன்றி கூறுவார்.

இந்தியாவிலேயே சிறந்த முறையில்

# தன்னிறைவுத் திட்டம்: புரட்சித்தலைவர் ஆட்சியின் சாதனை

### சட்டசபையில் கழக எம்.எல்.ஏ.க்கள் பாராட்டுரை

**சென்னை, மார்ச் 16- இந்தியாவிலேயே தமிழகத்தில் தான் புரட்சித்தலைவரது ஆட்சியில் தன்னிறைவுத் திட்டம் சிறந்த முறையில் செயல்பட்டு வருகிறது. இதனால் கிராமங்கள் முன்னேற்றம் பெற்று வருகின்றன என்று சட்டப் பேரவையில் கழக உறுப்பினர்கள் பாராட்டிப் பேசினார்கள்.**

சட்டப் பேரவையில் கழக உறுப்பினர்கள் கழக ஆட்சியின் பல்வேறு திட்டங்களைப் பாராட்டிப் பேசினார்கள்.

உள்ளாட்சி மன்றங்கள், நெடுஞ்சாலைத் துறை மானியக் கோரிக்கைகள் மீதான விவாதத்தில் பேசுகையில் கணபதி (கழகம்) கூறியதாவது:—

இந்தியாவிலேயே தமிழகத்தில்தான் தன்னிறைவுத் திட்டம் சிறப்பாக செய்யப்பட்டு வருகின்றது. இதனால் கிராமங்கள் அதிக முன்னேற்றம் அடைந்து வருகின்றன.

எனது தொகுதியில் உள்ள சேத்தியா தோப்பில் பாலம் பழையதாக உள்ளது. அதை சீரமைக்க வேண்டும்.

திருமுட்டம் ஊராட்சியின் நிதிநிலைமை மிகவும் மோசமானநிலையில் உள்ளது. அதை தன்னிறைவுத் திட்டத்தில் சேர்த்து உதவிகள்செய்ய வேண்டும்.

இவ்வாறு கணபதி பேசினார்.

சின்னராஜ் (கழகம்) பேசுகையில் கூறியதாவது:-

இந்த அரசில் திட்டங்கள் நல்ல முறையில் நடைமுறைப் படுத்தப் பட்டு வருகின்றன.

கிராமவளர்ச்சி, வேலை வாய்ப்பு திட்டம், ஊரக வளர்ச்சி போன்றவற்றிற்காக இந்த ஆண்டு மட்டும் 200 கோடி ரூபாய்க்கும் மேல் ஒதுக்கியிருப்பது இந்தியாவிற்கே முன்னோடியாகும்.

தொண்டாமுத்தூர்ஒன்றியத்தில் உள்ள 4 பேரூராட்சிகள் தங்கள் ஊழியருக்கு சம்பளம் கொடுக்காத நிலையில் உள்ளன. இந்த பேரூராட்சிகளை தன்னிறைவு திட்டத்தில் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

இவ்வாறு சின்னராஜ் பேசினார்.

## பெருமாள்

பெருமாள் (கழகம்) பேசுகையில் கூறியதாவது:

ஆதி திராவிடர்களுக்கு வீடுகள் சாலை வசதி, மயானப்பாதை அமைத்தல் போன்றவை துரிதமாக செய்து வருவதற்கு நன்றிதெரிவித்துக்கொள்கிறேன்.

எனது தொகுதியான வரகூர் தொகுதி மிகவும் பின்தங்கிய தொகுதியாகும். அதை வளர்ச்சியடையசெய்யவேண்டும்.

மருதையாற்றின் குறுக்கே உள்ள பாலம் வலுவானதாக இல்லை. மழைக்காலங்களில் இதன் அருகே வசிக்கும் மக்கள் தீவில் வாழ்வது போல வாழ்ந்து வருகிறார்கள்.

தற்போது புரட்சித் தலைவர் அரசு மருதையாற்றின் குறுக்கே பாலம் கட்ட 50 லட்சம் ரூபாய் ஒதுக்கீடு செய்திருப்பதற்கு தொகுதி மக்கள் சார்பில் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆலத்தூர் ஒன்றியத்தில் சாலைகளை சீர் படுத்தவேண்டும்.

இவ்வாறு பெருமாள் பேசினார்.

## சிவப்பிரகாசம்

சிவப்பிரகாசம் (கழகம்) பேசுகையில் கூறியதாவது:—

சென்ற ஆண்டு பட்ஜெட் கூட்டத் தொடரில் நான் சொன்ன கோரிக்கையை ஏற்று எனது தொகுதிக்கு 30 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருப்பதற்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறேன்.

தன்னிறைவுத் திட்டம் மூலம் கொல்லிமலையில் சாலைகள் அமைக்க 1 கோடி ரூபாய் ஒதுக்க வேண்டும். என் தொகுதியைச் சேர்ந்தமங்களபுரம் சாலையைத்தார் சாலையாக மாற்ற வேண்டும்.

இவ்வாறு சிவப்பிரகாசம் கூறினார்.

## கலிதீர்த்தான்

கலிதீர்த்தான் பேசுகையில் கூறியதாவது:—

என்னுடைய தொகுதியைச் சேர்ந்த சங்கராபுரம், கள்ளக்குறிச்சியில் தன்னிறைவுத் திட்டம் நல்ல முறையில் செயல்பட்டுவருகிறது. இதனால் மக்கள் பூரிப்படைந்துள்ளனர். முதல்வர் புரட்சித்தலைவர் கல்ராயன் மலைப்பகுதி மலைவாழ் மக்களுக்காக 2 சாலைகளை ரூ. 6 கோடி செலவில் அமைக்க திட்டமிட்டு, இப்போது முதல்கட்டப் பணிகள் துவக்கியுள்ளதைபார்த்து மலை வாழ் மக்கள் முதல்வர் புரட்சித்தலைவரைப் பாராட்டுகிறார்கள்.

இவ்வாறுகலிதீர்த்தான் பேசினார்.

## வெள்ளைச்சாமி

வெள்ளைச்சாமி (கழகம்) பேசுகையில் கூறியதாவது:—

தன்னிறைவுத் திட்டப் பணிகளில் கழிப்பிடம் அமைக்கும் பணிகளையும் சேர்த்துக்கொள்ளவேண்டும். ஏன் என்றால் இது அடிப்படைத் தேவையாகும்.

ஊராட்சி ஒன்றியங்கள் ஒரு லட்சம் ரூபாய் மதிப்புக்கு குறைந்த பாலங்களையே கட்ட எடுத்துக் கொள்ளவேண்டும் என்ற விதிஇருக்கிறது. இதனால் எனது தொகுதியில் பல பாலங்கள் கட்ட முடியா நிலை இருக்கிறது. ஆகவே ஊராட்சி ஒன்றியங்கள் 1 லட்சம் ரூபாய் மதிப்புக்கு மேற்பட்ட பாலங்களை கட்ட வாய்ப்பு கொடுக்க வேண்டும்.

சின்னாளப் பட்டி பேரூராட்சியை நகராட்சியாக உயர்த்த வேண்டும்.

இவ்வாறு வெள்ளைச்சாமி பேசினார்.

## அரங்கராசன்

அரங்கராசன் (கழகம்) பேசுகையில்கூறியதாவது:

துறையூர் நகராட்சியின் நிதி நிலை பற்றாக் குறையாக உள்ளது. இதை தன்னிறைவுத் திட்டத்தின்கீழ் எடுத்துக்கொள்ள வேண்டும்.

துறையூர் நகராட்சியை 3வதுகிரேடிலிருந்து2 வது கிரேடுக்கு உயர்த்தவேண்டும்.

துறையூர் நகராட்சி சினிமா தியேட்டர் கட்ட நிதி கேட்டு அரசுக்கு மனு போட்டுள்ளது. இதற்கான நிதியை ஒதுக்கவேண்டும்.

துறையூர் ஊராட்சிக்கு தன்னிறைவு திட்டத்தின் கீழ் மேலும் ரூ 10 லட்சம் நிதி ஒதுக்க வேண்டும்.

இவ்வாறு அரங்கராசன் பேசினார்.

## ஜி. மூர்த்தி

குடியரசுக் கட்சியைச் சேர்ந்த உறுப்பினர் ஜி. மூர்த்தி பேசுகையில் கூறியதாவது:—

தடைகளை உடைத்து எறிந்து உள்ளாட்சித் தேர்தல்களை உடனடியாக நடத்த வேண்டும்.

யார் தடைகளை வாங்கி யிருக்கிறார்களோ அவர்களது பெயர் பட்டியலை வெளியிடவேண்டும்.

பஞ்சாயத்துத் தேர்தலில் ஒதுக்கீட்டை ஒழிக்க வேண்டும் என்று சிலர் உள்ளனர்.

அரசு துணிச்சலான முடிவுகளை மேற்கொண்டதற்கு நன்றி கூறிக் கொள்கிறேன்.

தமிழகத்தில் தன்னிறைவுத் திட்டம் சிறப்பான முறையில் நடந்து வருகிறது.

இவ்வாறு ஜி. மூர்த்தி பேசினார்.

இன்று மாலை

தியாகராயநகரில்

## முசிறிப்புத்தன் பேசுகிறார்

சென்னை, மார்ச் 16- இன்று (16ந்தேதி) மாலை தியாகராயநகர் பஸ்நிலையம் அருகில் சண்முகம் தலைமையிலும், பாண்டியன்முன்னிலையிலும் கழகப் பொதுக்கூட்டம் நடக்கிறது.

முசிறிப்புத்தன், டாக்டர் சமரசம். மதுரை இளவரசன், ஆடலழகன், லியாகத் அலிகான், மதுசூதனன், கு.க. செல்வம் தி. நகர் மூர்த்தி. சைதை துரைசாமி, கோ. சாமிநாதன், செங்கைமணி மாறன், எஸ். விஜய குமார் ஆகியோர் பேசுகிறார்கள்.

## தி. நகர் தொகுதியில் தொடர் கூட்டங்கள்

சென்னை, மார்ச். 16- தியாகராயநகர் தொகுதியில் நாளை (17.ந் தேதி) முதல் ஒருவார காலத்துக்கு தொடர்ந்து கழகக் கூட்டங்கள் நடக்கின்றன.

நாளை (17-ந் தேதி) 109 வது வட்டத்தில் அமைச்சர் முத்துசாமி பேசுகிறார்,

19-ந்தேதி 110வது வட்டத்தில் டாக்டர் நாவலர் திருப்பூர் மணிமாறன், காடுவெட்டி கண்ணப்பன் ஆகியோர் பேசுகிறார்கள்.

24ந்தேதி 119வது வட்டத்தில் முசிறிப்புத்தன், திருச்சி சவுந்திரராஜன், புலவர் அறிவுடைநம்பி ஆகியோர் பேசுகிறார்கள்.

25ந் தேதி 112—வது வட்டத்தில் அமைச்சர் அண்டேயும், 27-ந் தேதி 111-வது வட்டத்தில் அமைச்சர் பொன்னையனும் பேசுகிறார்கள். இந்தத் தகவலைத் தொகுதி செயலாளர் தி. நகர் மூர்த்தி அறிவிக்கிறார்.

## கழகத்தோழர் மருத்துவ மனையில் அனுமதி

சென்னை, மார்ச் 16— சென்னை 51 வது வட்ட எம். ஜி. ஆர். மன்ற பொருளாளர் ஆர். கணேசன் உடல் நலக்குறைவால் ஸ்டான்லி மருத்துவ மனையில் சிகிச்சை பெற்று வருகிறார்.

கழகவட்டச்செயலாளர் எம். எஸ். மணி மேல் அமைப்புப் பிரதிநிதிகள் என். ராமச்சந்திரன், எஸ். எஸ். ராஜேந்திரன் சு. மனோகரன், டி. கே. சின்னப்பா, பி. இளங்கோவன், எம். பன்னீர். அருள் ஆகியோர் மருத்துவமனையில் கணேசனை சந்தித்து உடல் நலம் பற்றி விசாரித்தனர்.



### சென்னை மாநகராட்சி

## மலர்க் காட்சி

அன்புடையீர்!

திருவள்ளுவர் ஆண்டு 2013, துன்மதி பங்குனித் திங்கள் 4-ம் நாள் (17-3-1982) புதன்கிழமை மாலை 5-30 மணிக்கு பீப்பிள்ஸ் பார்க்கில் உள்ள "மைலேடிஸ் தோட்டத்தில்" 57-ஆம் ஆண்டு மலர்க் காட்சியினை

திரு. து. முருகராசு இ. ஆ ப.
சிறப்பு அதிகாரி, சென்னை மாநகராட்சி

தலைமையில்

மேதகு தமிழக ஆளுநர்

உயர்திரு. சாதிக் அலி அவர்கள்

ஆரம்பித்து வைப்பார்கள்

தாங்கள் வருகை தந்து நிகழ்ச்சியினைச் சிறப்பிக்க வேண்டுகிறேன்

திருமதி யாஸ்மின் அகமது. இ.ஆ.ப.,
ஆணையாளர், சென்னை மாநகராட்சி



தமிழ்நாடு அரசு

நெடுஞ்சாலை மற்றும் ஊரகப்பணித் துறை

## குறுகியகால ஒப்பந்த அறிவிப்பு

தமிழ்நாடு ஆளுநருக்காவும். அவருடைய சார்பாகவும், கீழே கொடுக்கப்பட்டுள்ள வேலைகளுக்கு அரக்கு முத்திரையிடப்பட்ட ஒப்பந்த நமூனாக்கள், கண்காணிப்புப் பொறியாளர் (நெ) கிராம சாலைகள், திருச்சி அவர்களால் இலக்கம் 15ஏ, காஜாநகர், முதல் தெரு, திருச்சி—20 ல் உள்ள அவரது அலுவலகத்தில் 25-3-82 வியாழக்கிழமை அன்று பிற்பகல் 3·00 மணி வரை (அலுவலக கடிகாரப் படி) கோரப்படுகின்றன. அவ்விதம் கோரப்பட்ட ஒப்பந்த நமூனாக்கள் அன்றைய தினமே பிற்பகல் 3-15 மணிக்கு ஒப்பந்தக்காரர்கள் முன்னிலையில் திறக்கப்பட்டு வாசிக்கப்படும்.

| வரிசை எண் (1) | வேலையின் பெயர் (2) | அழைப்பு எண் (3) | முன் வைப்புத் தொகை (4) | முடிக்க வேண்டிய காலம் (5) | ஒப்பந்தக் காரர் தகுதி (6) | ஒப்பந்த நமூனாக்கள் கிடைக்கும் இடம் (7) |
|---|---|---|---|---|---|---|
| | ரூபாய் இரண்டு இலட்சங்களுக்கு மேற்பட்ட வேலைகள் | | | | | |
| 1. | திருச்சி கோட்டம் | | | | | |
| | நாகையநல்லூர் சாலையில் கி. மீ. 0-6—ல் பாலம் கட்டுதல். | மூன்றாம் அழைப்பு | 3,400- | 9 மாதங்கள் | இரண்டாம் வகுப்பு | கோ.பொ. (நெ)கி.சா திருச்சி |
| 2. | புதுக்கோட்டை கோட்டம் | | | | | |
| | ஆதனக்கோட்டை ஆலங்குடி சாலை, கி.மீ. 13-8-லிருந்து மாங்கொட்டை வரை செல்லும் சாலையை மேம்பாடு செய்தல். கி. மீ. 0-0-1-6 | 2-வது அழைப்பு | 2,200- | 12 மாதங்கள் | 2-ம் வகுப்பு | கோ.பொ. (நெ)கி.சா புதுக் கோட்டை |
| 3. | தஞ்சாவூர் கோட்டம் | | | | | |
| | நெடுவாசல் சாலையை மேம்பாடு செய்தல். கி. மீ. 5-0-6-6 | 3-வது அழைப்பு | 2,500- | 12 மாதங்கள் | 2-ம் வகுப்பு | கோ.பொ. (நெ) கி.சா தஞ்சாவூர் |
| | அ. பெரிய குத்தகை புஷ்பவனம் சாலையை-மேம்பாடு செய்தல் கி.மீ. 2-0—3-0 | 2-ஆம் அழைப்பு | 2,100- | " | " | " |
| | ஆ. " " கி.மீ. 3-0—4-0 | " | 2200- | " | " | " |
| 4. | மதுரை கோட்டம் | | | | | |
| 5. | சென்னம்பட்டியிலிருந்து பேய்குளம் செல்லும் சாலையை மேம்பாடு செய்தல் கி.மீ. 0-0—3-0 | 2-வது அழைப்பு | 3,850- | " | " | கோ.பொ. (நெ) கி.சா மதுரை |
| 6. | உசிலம்பட்டி சாலை கி.மீ 7-0 லிருந்து பிரிந்து தாடையம்பட்டி செல்லும் சாலையை மேம்பாடு செய்தல் கி.மீ. 0-0—1-4 | " | 2,100 | " | " | " |

மேற்படி வேலைகளுக்கான ஒப்பந்த அறிவிப்புப் பற்றிய நமூனாக்கள், விபரங்கள் குறித்த பட்டியல்கள் மற்றும் அதற்கான வரைபடங்கள் முதலியவற்றை அந்தந்த வேலையில் எதிரில் குறிப்பிட்டுள்ள கோட்டப் பொறியாளர் (நெ) கிராம சாலைகள், அவர்களிடமிருந்து ஒரு செட்டிற்கு ரூ104·50 (ரூபாய் நூற்றி நான்கும், பைசா ஐம்பது மட்டும்) விற்பனை வரி உட்பட (திருப்பித்தரப் படமாட்டாது) செலுத்தி எழுத்து மூலமான வேண்டுகோளின்படி 18—3—82 முதல் 24-3-82 வரை பெற்றுக்கொள்ளலாம். (குறிப்பிட்டுள்ள விற்பனை, ஆரம்ப முடிவு தேதி உட்பட) ஒப்பந்த நமூனாக்கள் இத்துறையில் பதிவு பெற்ற ஒப்பந்தக்காரர்களுக்கு மட்டும் வழங்கப்படும். அவ்வொப்பந்தக்காரர்கள் அந்தந்த பிரிவைச் சார்ந்த வகுப்பில் பதிவு பெற்றவராய் இருக்க வேண்டும். முன் வைப்புத் தொகை, பின் வைப்புத் தொகைகளுக்கு பாங்கு கியாரண்டிகள் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது.

கண்காணிப்பு பொறியாளர் (நெ)
கிராம சாலைகள் வட்டம்
திருச்சிராப்பள்ளி

DIPR-10762-82-14-maa